**2**

# அணில்கள்

அவள் விடிகாலையில் கண்விழித்தபோது ஆரஞ்சு நிற சூரியன் ஜன்னல் பக்கத்தில் நின்று உள்ளே வரலாமா என்று கேட்டுக்கொண்டிருந்தான்.

காலைக் காற்று இதமாக இருந்தது.

எழுந்திருக்க மனமில்லாததுபோல அவள் திரும்ப கண்களை மூடிக்கொண்டாள்.

ட்ருவ்வி...ட்ருவ்வி...ட்ருவ்வி...ட்...

நிசப்தமான அந்த நிமிஷத்தில் திடும்மென ஒரு பறவையின் குரல் பெரிசாய் கேட்க அவள் எழுந்து உட்கார்ந்துகொண்டாள்.

என்ன பறவை இது! புது தினுசாய் கத்துகிறது!

ஜன்னல் வழியாகத் தெரிந்த மாமரத்தில் பார்வையைச் சுழல விட்டவரைக்கும் எதுவும் தென்படாது போகவே, அவள் தூக்கம் கலைந்தவளாய் எழுந்து பாத்ரூமை நோக்கி நடந்தாள்.

இந்த வீட்டுக்குக் குடிவந்துவிட்ட ஒரு மாசமாய் அவளுக்கு இது ஒரு இன்பமான பொழுதுபோக்காய் இருக்கிறது.

முதல் நாள் வீட்டைப் பார்க்க வந்தபோது, வீட்டைச் சோலை யாய் சூழ்ந்துகொண்டிருந்த மரங்களைப் பார்த்து, மலைத்துதான் போனாள்.

வாசல்பக்கம் ஆஜானுபாகுவாய் இரண்டு வேப்பமரங்கள். கூடவே ரத்தச் சிகப்பான மலர்களோடு ஒரு கொன்றை மரம்.

பக்கவாட்டில் குடையாய்க் கவிழ்ந்திருந்த மகிழமரம், சற்று தள்ளி ராக்ஷஸ வளர்த்தியுடன் மாமரங்கள்.

வீட்டுக்குப் பின்னால் தோப்பாய் வாழை, தென்னை மரங்கள். அப்புறம் இந்த பக்கமாய், வீட்டை ஒட்டி உயரமும், பருமனுமாய் இரண்டு கொய்யாமரங்கள்.

எந்த அறை ஜன்னல் வழியாகப் பார்த்தாலும் பச்சென்று ஏதாவது ஒரு மரமும், அதில் ஆனந்தமாய் கூடுகட்டி வாழ்ந்த பறவைகளும், அணில்களும் மனசில் பதிந்துவிட வாடகை கூட ஆனாலும் பரவாயில்லை, இந்த வீட்டையே முடித்துவிடலாம் என்று கணவனிடம் கெஞ்சி தன் விருப்பத்தை அவள் நிறை வேற்றிக்கொண்டாள்.

கல்யாணமாகி வருஷம் ஒன்றே ஆவதாலும், இன்னும் குழந்தைக்குட்டி என்று எதுவும் பிறக்காததாலும் கணவனுக்கு சாப்பாடு போட்டு ஆபீஸுக்கு அனுப்பிவிட்டால் அவள் வாஸ்த வத்திலேயே தனிக்காட்டு ராணிதான். இஷ்டத்துக்குத் தூங்குவாள், இஷ்டத்துக்குப் பெயிண்ட் பண்ணுவாள், இஷ்டத்துக்கு உடற் பயிற்சி செய்வாள். குறுக்கும் நெடுக்கும் ஓடுவாள், ஸ்கிப் பண்ணு வாள், உடம்பைத் திருகித்திருகி எக்ஸஸைஸ் செய்வாள். இஷ்டத் துக்கு ப்யூட்டி ட்ரீட்மெண்ட் எடுத்துக்கொள்கிறேன் பேர்வழி என்று பத்திரிகைகளில் வெளியாகும் குறிப்புகளை வைத்துக் கொண்டு தேனோடு கிளிசரினை குழப்பி முகத்தில் தடவுவாள், இல்லையென்றால் கடலைமாவைப் பாலில் குழைத்து மாஸ்க் போட்டுக்கொள்வாள்.

இப்படி மத்தியான நேரங்களில் கொட்டடா, குடைடா என்று அவள் வீட்டில் அல்லாடும்போது அவளுக்குப் பெருமளவுக்கு கம்பெனி கொடுப்பவை இந்தப் பறவைகள், முக்கியமாய் அணில்கள்.

அந்தத் தோட்டத்தில் ஒரு அணில் படையே இருந்த மாதிரி தான் அவளுக்குத் தோன்றியது. நாலு வேப்ப மரத்தடியில் ஓடி விளையாடும், நாலு தென்னை மரங்களில் ஏறி மொசமொச வென்று பன்னாடைகளைப் பிராண்டி, வாய் கொள்ளாமல் நார் சேகரித்துக்கொண்டு ஓடும். நாலு பாளையில் உள்ள பூக்களைக் கடித்துக் கீழே துப்பும். இரண்டு வாசலில் அவள் போட்டிருக்கும் அரிசிமாவு கோலத்தைச் சுரண்டித் தின்னும். ஒன்று வாலைத் தூக்கிக்கொண்டு கச் கச் கச் என்று கத்தும். இன்னும் ஒன்று உங்களுக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை என்கிற தினுசில் வாட்டர் டாங்கிலிருந்து உபரித் தண்ணீர் வழிந்துவிழும் இடத்தில்,

சில்லென்று பாசி படர்ந்திருக்கும் கல்மேல் அக்கடா என்று கையையும், காலையும் பரப்பிக்கொண்டு படுத்திருக்கும்.

அணில்களுக்குள் இத்தனை துடிப்பும், விளையாட்டும் இருக்கும் என்று அவள் வாஸ்தவத்திலேயே நினைத்ததில்லை யாதலால் முதல் சில நாட்கள் வியந்து நின்றாள். அப்புறம் ஆர்வத்தோடு ஒவ்வொரு நிமிஷமும் அணில்களைத் தேடித்தேடி கண்காணித்து ரஸிக்கத் தொடங்கினாள்.

குழந்தைகளில் விஷமக்கார பிள்ளை, சாது பிள்ளை என்று இருப்பதுபோல அணில்களிலும் உண்டு என்பதைத் தெரிந்து கொண்டபோது அவள் ஆச்சர்யப்பட்டுப் போனாள்.

காலையில் எழுந்த உடன் சம்பிரதாயமாக வயிற்றுப் பாட்டை கவனித்துக்கொண்ட பின், இந்த அணில்களுக்கு ஒரு அலாதி குஷி பிறந்து விடுவதாகவே அவளுக்குத் தோன்றியது.

வேப்பமரத்தை முற்றுகை இட வேண்டியது, ஆளுக்கு ஒரு கிளையில் உட்கார்ந்துகொள்ள வேண்டியது. நொடிக்கு ஒரு பழத்தைச் சப்பித் தின்று கொட்டையை மட்டும் கீழே எறிய வேண்டியது. இதே வேலை! காலை ஒன்பது மணிக்குள் வேப்ப மரத்தடியில் ஒரு கூடை கொட்டைகளைப் பொறுக்கலாம், நிச்சயம்.

கால்களால் பழத்தை அழுந்தப் பிடித்துக்கொண்டு, கைகளால் பழத்தை உரித்து, உறிஞ்சி, நிமிஷமாய் பத்துப் பதினைந்து பழங்களை ஒரு அணில் சாப்பிடும் அழகும் சுறுசுறுப்பும் ஆளை அசர அடிக்க, ஆரம்பத்தில் அவள் தன் கணவனை அவசரமாய் "இங்க வாங்களேன்" என்று அழைத்த துண்டு. பாதி ஷேவிங்கில் வந்து நிற்பவனிடம் "இத்துனூண்டு இருந்துண்டு இது திங்கற வேகத்தைப் பாருங்களேன்" என்று வியந்தாள். "இந்த ஸ்பீடுலே தின்னா வயறு அப்ஸெட் ஆகாதோ?" என்று சந்தேகம் கேட்டாள். "வேப்பம்பழ ஸீசன் முடிஞ்சுடுத் துன்னா எதைச் சாப்பிட்டுப் பசியைத் தீர்த்துக்கும்?" என்று கவலைப்பட்டாள்.

முதல் ஓரிரு சமயங்கள் மனைவியின் உற்சாகத்தைத் தணிக்க விரும்பாதவனாக அவள் கணவன் நின்று இவள் பேச்சைக் கேட்டான். "இந்த அணில்கள் மேலதான் உனக்கு எத்தனை இன்ட்ரஸ்ட்?" என்று வியந்தான். அப்புறம், அவளுடைய அணில் ஈடுபாடு ரொம்பவும் அதிகரித்தப்புறம், "பேப்பர் படிச்சிண்டு

இருக்கேன்...உன் அணில் சமாசாரம்தானே? அங்கேயிருந்தே சொல்லு, எனக்குக் கேக்கறது" என்று சொல்ல ஆரம்பித்தான்.

இந்த அணில்களில் சிலவற்றை அவளால் குறிப்பாக அடையாளம் கண்டுபிடிக்க முடிந்ததால் அவைகளுக்கு அவள் பேர்வைக்க ஆரம்பித்தாள்.

முகத்தில் கருப்புப் புள்ளியோடு இருப்பதற்குப் பேர் பீமன். இது எப்பப்பாரு எதையாவது தின்றுகொண்டே இருக்கும். வாலில் மயிர் உதிர்ந்து காணப்படுவது ஹனுமான். சரியான குரங்கு. பொழுது போகாத நிமிஷங்களில் பாரிஜாதச் செடியின் பட்டையை உரித்து செடியைக் காயப்படுத்துவதிலும், நீளமாய் காய்த்துத் தொங்கும் புடலங்காயை வீம்புக்காகக் கடித்துத் துப்பு வதிலும் தென்னம்பாளைமேல் தொம்தொம்மென்று குதித்து பூக்களைக் கொட்டச் செய்வதிலும் இது மன்னன். சோனி உடம்பு, துருதுரு முகமுமாய் இருப்பது சீதா. லேசில் இது வெளியில் வராது. அப்படிப் பார்க்கும், இப்படிப் பார்க்கும், ஓரடி எடுத்து வைத்துவிட்டுத் தலையைக் குனிந்து கொள்ளும். தான் பெரிய கற்புக்கரசி மாதிரியும் சட்டென்று எவர் எதிரிலும் வந்துவிடக் கூடாது என்பதிலும் சீதா அலாதி கவனம் செலுத்துகிற மாதிரி தோன்றும்.

அப்புறம் நாலைந்து அர்ஜுனன்கள், ஓடிவிளையாட சளைக்காததுகள்—இந்த மரத்திலிருந்து அந்த மரத்துக்கு கன காரியமாய் ஓடும், நிமிஷமாய் ஏறி இறங்கும், தாவும், பெரிய அத்தலெட்ஸ் என்று மனசில் நினைப்பு.

ஏழெட்டு கிருஷ்ணன்களும் உண்டு. சதா பெண் அணில் களோடு சல்லாபித்துக்கொண்டு, உடம்பை முகர்ந்து பார்த்துக் கொண்டு...ரியல் வுமனைஸர்ஸ்...

அப்புறம்...ஆ! அந்த ஹைட்ரோஸீல் அணில். பின்பக்கம் ஏகமாய் வீங்கி கால்களை அகட்டிஅகட்டி ஓடும் அந்த அணில். முதலில் அந்த அணிலைப் பார்த்தபோது அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது நிஜம்.

ஹைட்ரோஸீலா?

அணிலுக்கா?

வருமா?

யாரிடமாவது கேட்கலாமா?

இதையா? கேட்டால் சிரிக்க மாட்டார்களா? கணவனிடம் கேட்கக்கூட வெட்கமாக இருந்ததால் அவள் தன் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளாவிட்டாலும் அந்த அணிலுக்கு மட்டும் ஹைட்ரோஸீல் என்று பெயரிட்டு விட்டாள்.

**பா**த்ரூமில் பல் விளக்கி முகம் கழுவினவள் சமையல் அறைக்குச் சென்று பில்டரில் காபிப்பொடியைப் போட்டு அமுக்கி, கொதித்த வெந்நீரை ஊற்றும்போது அமைதியான காலை நேரத்தில் 'கரட் கரட்' என்று அந்த சப்தம் துல்லியமாகக் கேட்டது.

தலை நிமிர்ந்தாள். சமையல்கட்டை ஒட்டியிருந்த ஜன்னல் அருகில் கொய்யா மரக்கிளை ஏகமாய் படர்ந்திருக்க, நுனிக் கிளை ஒன்றில் பீமன் சம்மணமிட்டு அமர்ந்து கைகளில் ஒரு கொய்யாக் காயைப் பிடித்து ஸ்வாரஸ்யமாக ராவிக்கொண்டிருந்தது. அவள் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே மேல் தோலை சுரண்டித் துப்பி விட்டு, கொஞ்சம் சிகப்பாய் இருந்த உட்பக்கத்தைப் பதம் பார்த்தது. இரண்டு வாய் தின்ற பிறகு அதைக் கீழே போட்டுவிட்டு இன்னொரு காயிடம் ஓடியது.

ஜன்னலிடம் சென்று மரத்தை முழுசாய்ப் பார்க்கையில் இன்னும் ஐந்தாறு அணில்கள் ஆங்காங்கு இருப்பதும், இஷ்டத் துக்குக் காய்களை ராவித் தள்ளுவதும் அவளுக்குப் புரிந்தது.

வேப்பம்பழ ஸீசன் முடிந்து கொய்யா ஸீசன் ஆரம்பமாகி விட்டதா?

திடும்மென்று அவளுக்கு இரண்டு நாட்களுக்குமுன் வீட்டுக்கார அம்மாள் வாச்வாச்சென்று கத்தியது ஞாபகத்துக்கு வந்தது.

ஸ்வாமிப் படங்களுக்கு பூ சாற்ற வேண்டி அவள் கீழே போனபோது அந்த அம்மாள் கழுத்து நரம்பு புடைத்துப் போக தோட்டக்காரனிடம் கத்திக்கொண்டிருந்தாள்.

"நீயெல்லாம் ஒரு தோட்டக்காரன். உனக்கு எழுபது ரூபா சம்பளம்...அடிச்சிக்க இன்னும் ரெண்டு கை வேணும்டா...இதுக்கு ஒரு வழி பண்ணுன்னு சொல்லறதைக் காதுலே வாங்காமலே இருந்தா என்ன அர்த்தம்?...ம்..."

"கத்தாழை கட்டினா வராதுன்னாங்கம்மா; கட்டிப் பார்த்தேன். மணி கட்டினா வராதுன்னாங்க...அத்தையும் கட்டிப்

பாத்தேன்...துணி, ஓலை, பிளாஸ்டிக் பேப்பரு எல்லாத்துக்கும் இதுங்க பெப்பேனுதுங்க...எனக்கு என்ன பண்ணறதுன்னு நிசம்மா புரியலைம்மா...''

“ரெண்டு வருஷம் முன்னாலே இதுங்க தொல்லை இத்தனை ஜாஸ்தியா போனப்போ ஒரு குறவனை இட்டாந்தியே... அவனக் கூட்டியாறதுதானே!''

“அவன் ஊரைவிட்டுப் போயிட்டானாம்மா...அத்தையும் விசாரிச்சுதான் பார்த்தேன்...''

“கர்மம்...கர்மம்... இதுங்களுக்கு சட்புட்டுனு ஒரு வழி பண்ணணும்டா...இல்லைன்னா எனக்குத் தூக்கம் வராது...சரி நீ போ...நா யோசிக்கறேன்...''

அந்தப் பக்கம் விஷயம் புரியாமல் முழித்துக்கொண்டு நின்ற அவளிடம் வீட்டுக்காரம்மாள் தானாக விவரித்தாள்.

“இந்த அணிலுங்க ரோதனை பெரிய ரோதனையாயிடிச்சிம்மா...இதுங்களை ஓழிச்சுக்கட்ட வேளை வரமாட்டேங்குது; ஜாதி கொய்யாப் பழங்க...ஒண்ணைக் கண்ணுலே காட்ட மாட்டேங்குது, சனியங்க... ரெண்டாம் வருஷம் இதுங்க தொல்லை சகிக்காமே ஒரு குறவனை கூட்டி வரச் சொன்னேன். அவன் மரத்தை சுத்தி தரையிலே வலைஅடிச்சுட்டு, உண்டிவில்லால மரத்துலே பதுங்கி கிட்டு இருக்கிற அணில்களைக் குறிபார்த்து அடிப்பான். ஒவ்வொண்ணா தொப்புதொப்புனு வலைலே விழும். வேகமா ஓடிட முடியாதபடி வலை தடுக்கறப்ப இவன் டபக்குனு புடிச்சி பைக்குள்ள போட்டுகிடுவான். ஒரு மணி நேரத்துலே இருவது புடிச்சிட்டான்னா பாரேன்! அப்புறம் ரெண்டு வருஷமா இதுங்க தொல்லை இல்லாம நிம்மதியா இருந்தேன். திரும்ப இந்த வருஷம் துவங்கிடிச்சி. அந்தக் குறவன் ஊரை விட்டுப் போயிட்டானாம்... ஹூம்... இனிமே புதுசா எதுனாச்சும் ரோசிக்கணும்...''

கேட்டுக்கொண்டு நின்றவளுக்கு திக்கென்று இருந்தது.

வலை கட்டி, உண்டிவில்லால் அடித்து, பயந்து கீழே குதிப்பதைப் பிடித்து விடுவானா? அப்புறம் என்ன செய்வான்?

“ஆங்? என்ன செய்வானா? தணல்லே சுட்டு ஜம்முனு தின்னுவான். வேற என்ன செய்வான்?''

மேற்கொண்டு அரை நிமிஷம் நின்று வீட்டுக்காரியிடம் பேச முடியாது போக, அவள் வேகமாக மாடிக்கு வந்தாள்.

மார்பு படபடவென்றது. கண்ணோரங்களில் நீர் பள பளத்தது.

சீ—என்ன மோசமான மனுஷி.

ஸச் ஹார்ட்லெஸ் ஆக்ஷன்!

இப்போது கிளைக்குக் கிளை உட்கார்ந்துகொண்டு ஹாயாக கொய்யாக் காய்களைத் தின்னும் அணில்களைப் பார்க்கும்போது அவளுக்கு வீட்டுக்காரம்மாள் பார்த்தால் கோபப்படுவாளே என்ற கவலை எழுந்தது.

**அ**ந்தக் கவலை மாறாத மனசுடனேயே "ஊர்லேந்து சந்துரு வந்திருக்கான், போய்ப் பார்த்துட்டு வரேன்; ஞாயித்துக் கிழமைதானே" என்று சொல்லி கணவன் கிளம்பினபோது தலை ஆட்டினாள். சமைத்தாள். வேலை முடிந்து வேலைக்காரி கிளம்பினதும் கதவை தாள் போட்டுக்கொண்டு வந்தாள். வெயில் தெரியாமல் ஜிலுஜிலுத்த பின்வராந்தாவில் அந்த வாரப் பத்திரிகை ஒன்றோடு உட்கார்ந்தவளுடைய பார்வை ஜன்னலுக்கு வெளியில் ஓட, அவள் திடுக்கிட்டுப் போனாள்.

வராந்தாவை ஒட்டியுள்ள சுவர்கட்டைமேல் ஒரு அணில் தடுமாறி ஏற முயற்சித்து, கையும் காலும் கோணகோணலாய் இழுக்க தொபுக்கென்று தரையில் விழுந்தது. என்ன ஆயிற்று?

கிட்டச் சென்று பார்த்தபோது அணிலின் உடம்பெல்லாம் சின்னதாய் துடிக்கிற மாதிரி இருந்தது.

குளிர் ஜுரமா?

இந்தப் பக்கமாய் திரும்பினவளால் கொய்யாமரத்திலிருந்து ஒரு அணில் ஆஸ்பஸ்டாஸ் கூரையில் விழுந்து தடுமாறுவதைப் பார்க்க முடிந்தது.

பீமன்...

என்ன ஆயிற்று பீமனுக்கு?

அதே நடுக்கம்...அதே துவளல்...

கைப்பிடிச் சுவரிடம் சென்று தோட்டத்தை எட்டிப் பார்க்கை யில் மாமரத்தோரமாய் இரண்டு அணில்கள் கிடப்பது புரிந்தது.

ஹைட்ரோஸீல் அணில் தென்னைமரத்தில் கஷ்டப்பட்டு இரண்டடி ஏறியது. அப்புறம் இனி நம்மால் முடியாதுப்பா என்கிற

தினுசில் பிடிப்பு இல்லாமல் கீழே விழுந்து, பக்கவாட்டில் சாய்ந்து படுத்தது.

ஐயோ...என்ன ஆயிற்று?

வாட் ஈஸ் ஹாபனிங் டு ஆல் மை அணில்ஸ்?

தோட்டக்காரனின் தலை தெரிய அவள் உரக்கப் பேசினாள்.

"என்னாச்சுப்பா இதுங்களுக்கு? வெய்யிலா? ஸன் ஸ்ட்ரோக்கா? ஏன் இப்பிடி ஒண்ணு பின்னால ஒண்ணா துடிச்சுண்டு விழறதுகள்?"

தோட்டக்காரன் தலை நிமிர்த்திப் பார்த்தான்.

"விஷத்தைத் தின்னா துடிக்காம என்னம்மா செய்யும்? நேத்து ராவுக்கி அரிசிப்பொரி வாங்கியாந்து அதுலே விஷம் கலந்து தோட்டம் பூரா அம்மா சொன்னபடி தூவியிருந்தேனா, அத்தத் தின்னுபிட்டு எல்லாம் சாவுதுங்க...சாவட்டும்...சனியங்க..."

எ...ன்ன?

விஷமா?

பொரியில் கலந்து வைத்தார்களா?

அடப் பாவிகளா?

மளமளவென்று கண்களிலிருந்து நீர் இறங்க அவள் உள்ளே ஓடினாள். மரங்களோ, துடித்து சாகும் அணில்களோ கண்ணில் விழாதிருக்க வேண்டி ஜன்னல்களை எல்லாம் அறைந்து சாற்றின நிமிஷத்தில் வாசல் அழைப்புமணி ஒலித்தது.

அவள் கணவன்தான்.

உள்ளே வந்தான். கையில் ஒரு கூடை.

"சந்துரு டெல்லிக்குப் போயிட்டுத் திரும்பறப்போ அலகாபாத் கொய்யாப்பழம் மலிவா கிடைச்சுதாம். 'இந்தாடா பழம்—உன் வொய்ஃப் ஜாம் பண்ணறதுலே 'எக்ஸ்பர்ட்' ஆச்சே...பண்ணி எங்களுக்கும் ரெண்டு பாட்டில் கொடு'னு சொல்லிக் கொடுத்தான்."

அவளுடைய கண்ணீரையோ, முகத்தையோ கவனிக்காமல் பேசிக்கொண்டே உருண்டை உருண்டையாய் மஞ்சள் பந்து போன்ற கொய்யாப்பழங்களை அவன் டேபிள் மேல் எடுத்து

வைக்கவும், அவளுக்குள் திடும்மென்று ஆத்திரம் வெட்டிக் கொண்டு எழுந்தது.

"பெரி...ய்ய அலகாபாத் கொய்யாப்பழம்...இதைத் திங்கலேன்னா உசிரு போயிடுமோ! ஜாமாம் ஜாம்...மண்ணாங் கட்டி...ஒவ்வொருத்தருக்கும் எட்டு முழத்துக்கு நாக்கு, ஆயிரம் டேஸ்ட். ஹார்ட்லஸ் ஹ்யூமன் பீயிங்ஸ்! தாங்க சாப்பிட்டு, தாங்க நன்னா இருந்தா போதும்...மனுஷாளுக்கு அதானே முக்கியம். அவ்வளவுதானே?"

சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் கத்தி, கொய்யாப்பழங்களை மிகுந்த கோபத்துடன் தரையில் வீசி, மேஜை மேல் கவிழ்ந்து, உரக்க அவள் விசிக்க முற்படவும் அந்தக் கத்தலுக்கும், அந்த ஆத்திரத்துக்கும் காரணம் புரியாததால் அவள் கணவன் பேந்தப் பேந்த விழிக்கத் தொடங்கினான்.

*— ஆனந்த விகடன்—பொன்விழா மலர், 1980*